Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 12



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 39 | பராபவ மார்கழி 1966 டிசம்பர் | இதழ் 12

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : மு. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர் : வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி 25 காசு

## சமாஜப் பொதுக்கூட்ட அறிவிப்பு

சென்னை மயிலாப்பூர் மேடமாட வீதியிலுள்ள சமாஜ அலுவலகத்தில் 24-12-66 சனிக்கிழமை காலை 9-30 மணிக்கு சமாஜ ஆண்டு அறிக்கையையும் இவ்யாண்டு வரவு செலவுக் கணக்குகளையும் ஒப்புக்கொள்ள சமாஜப் பொதுக்கூட்டம் நிகழும். அக்கூட்டத்திற்கு உறுப்பினர் நிறைவெண் (Quorum) இல்லாவிட்டால் மேற்குறித்த பொருள்கள் பற்றி ஒப்புக்கொள்ள அவ்விடத்திலேயே மறுநாள் (25-12-66) ஞாயிற்றுக்கிழமை காலை அதே நேரத்தில் சமாஜ விதிகளின்படி வருபவர்களைக் கொண்டு அக்கூட்டம் நடத்தப்பெறும். பொது உறுப்பினர்கள் வருமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிறார்கள்.

(செயலாளர்)

நம் சமாஜ உறுப்பினர்கள் திரு. ந. இரா. ஷடரன் அவர்கள், (சமயபுரம் அஞ்சல், திருச்சி மாவட்டம்)

திரு. M. R. பாலகணபதி பி.ஏ., பி.டி., பிஜித்தீவு. ஆகிய இருவரும் ஆயுள் உறுப்பினரானார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம். மற்ற அன்பர்களும் இம்முறையைப் பின்பற்றுவார்களாக.

| | | |
|---|---|---|
| திருக்களிற்றுப் படியார் உரை | —அனுபூதி | 1-50 |
| திருவாசக ஆராய்ச்சிக் குறிப்புகள் | | 2-00 |
| தத்துவப் பிரகாசம் மூலமும் உரையும் | | 8-00 |
| சைவ சித்தாந்த சிறு நூல்கள் அட்டவணை | | 0-50 |

ஆகியவை சமாஜத்தில் கிடைக்கும்.

### திருமணம்

நம் சமாஜப் பழம்பெரு உறுப்பினர் சிவஸ்ரீ கு. ப. ர. சுப்பராயன் அவர்களின் அருமைத் திருமகனார் திரு. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும் குமாரி வள்ளியம்மை அவர்களுக்கும் 23-11-66 புதன்கிழமையன்று பேரூர் திருக்கோயிலில் திருமணம் மிகச் சிறப்புற நிகழ்ந்தது. புதுமணத் தம்பதிகள் எல்லா நற்பேறுகளும் பெற்று இனிதுற்று நீடுவாழ எல்லாம் வல்ல பரம்பொருளின் இணையடிகளை வணங்கி அருள் புரிய இறைஞ்சுகின்றோம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம்

(தொடக்கம் - 1905 — பதிவு - 1915)

# 61-ஆம் ஆண்டு விழா

—: ★ :—

# அழைப்பும் அறிவிப்பும்

••••••••••••••••••••••••

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

நன்று உடையானை, தீயது இலானை, நரை வெள் ஏறு
ஒன்று உடையானை, உமைஒரு பாகம் உடையானை,
சென்று அடையாத திருஉடையானை, சிராப்பள்ளிக்
குன்று உடையானை, கூற, என் உள்ளம் குளிரும்மே.

—*சம்பந்தர் தேவாரம்* (1 - 98 - 1)

*அன்புடையீர்!*

*சைவ சித்தாந்த மகா சமாஜத்தின்* **61-ஆம்** *ஆண்டு நிறைவு விழாவும், பொதுக் கூட்டமும், அதன் அங்கமாகச் சைவர், சைவ இளைஞர் மாநாடுகளும், 30, 31-12-66, 1-1-67 ஆகிய வெள்ளி, சனி,*

ஞாயிற்றுக்கிழமைகளில், திருச்சிராப்பள்ளி, மேல் அரண்சாலை, தேவர் மன்றத்தில் பின்னுள்ள நிகழ்ச்சி முறைப்படி நிகழும்.

காஞ்சிபுரம் - தொண்டை மண்டலம் ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் ஆதீனம் குருமகா சந்நிதானம் தவத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் சைவர் மாநாட்டிற்கும், இராம நாதபுரம் - திரு. காசிநாத துரை, எம். பி. அவர்கள் சைவ இளைஞர் மாநாட்டிற்கும் தலைமை வகிப்பார்கள்.

சித்தாந்த சைவம் பற்றி அறிஞர்கள் பலர் சொற்பொழிவுகள் ஆற்றுவார்கள்.

அன்பர்கள் அனைவரும் அங்கத்தினரும் வந்து கேட்டு, விழாவைச் சிறப்பிக்க வேண்டுகிறோம்.

ஆண்டுப் பொதுக்கூட்டத்திற்கு அங்கத்தினர்கள் வருகை புரிக.

இங்ஙனம் :

சமாஜத்தினர் :

தலைவர் :

கோ. மு. முத்துசாமி பிள்ளை, ஐ.ஏ.எஸ். (ஓய்வு).

உப தலைவர்கள் :

*ராவ்பகதூர்* - க. அரங்கசாமி முதலியார்

*ராவ்சாயிப்* - நல். முருகேச முதலியார்

செயலாளர் :

தி. கி. நாராயணசாமி நாயுடு.

துணைச் செயலாளர் :

மு. நாராயணசாமி முதலியார்

வரவேற்புக் குழுவினர், திருச்சி :

தலைவர் :

திருக்குறள்வேள் - ஜி. வரதராஜப் பிள்ளை, பி. ஏ.

துணைத் தலைவர்கள் :

ஆ. பொன்னுசாமி பிள்ளை, கி. ஆ. பெ. விசுவநாதம்

கூட்டு அமைச்சர்கள் :

சோ. கிருஷ்ணன், தி. சு. சிவப்ரகாசம்

பொருளாளர் :

லெ. அரு. அருணாசலம் பிள்ளை

உறுப்பினர்கள் :

ஆர். கிருஷ்ணசாமி ரெட்டியார்
ஏ. பி. ஜி. முருகேசன் செட்டியார்
டி. எம். முத்துசாமி பிள்ளை
பெ. குப்புசாமி பிள்ளை
எஸ். கே. கே. மாணிக்கம் செட்டியார்
அ. இராமநாதன் செட்டியார்
மா. சோக்கையன்
ம. ரெங்கசாமி பிள்ளை

ந. ச. கு. கணபதியா பிள்ளை

தி. சு. பட்டுச்சாமி ஓதுவார்

தே. துரைராசப் பிள்ளை

சா. பெரியசாமி

ஆ. சுப்பராயலு செட்டியார்

அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார்

என். சுப்பிரமணியன் செட்டியார், எம். எல். ஏ.

கே. இராஜகோபால் பிள்ளை, எம். சி.

ஆர். ஜெயதேவன்

எம். ஏ. அருணாசல முதலியார்

எச். தாண்டவராய பிள்ளை

சிவகுருநாத பிள்ளை

வீ. உலகநாதன்

ஆத. நாச்சியப்பச் செட்டியார்

எல். ஏ. பரமன் செட்டியார்

ஆ. வி. க. ஆவிச்சி செட்டியார்

மு. சுப்பிரமணியன் செட்டியார்

---

**வரவேற்புக் குழுவினர் அலுவலகம் :**

என் 33, புதுத்தெரு சந்து,
ஆண்டார் தெரு, திருச்சி - 2

**சமாஜ அலுவலகம் :**

என் 12, கிழ மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4

# நிகழ்ச்சி நிரல்

**(30 – 12 – 66) வெள்ளிக்கிழமை**

*காலை 7 மணி : மலைக்கோயில் தாயுமானுர் திருமுன் வழிபாடு.*

*காலை 9 முதல் 1 மணி வரை* - **சைவர் மாநாடு**

*இறை வணக்கம். சமாஜக் கொடியேற்றம்.*

வரவேற்பு உரை :

*திரு. ஜி. வரதராஜப் பிள்ளை, பி. ஏ., திருச்சி.*

சமாஜ ஆண்டு அறிக்கை :

*சமாஜச் செயலாளர்.*

மாநாட்டுத் திறப்பு உரை :

*தருமை ஆதீனம் தவத்திரு. வித்துவான்* - **சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள்.**

நூல் வெளியீடு :

*தவத்திரு. மீனுட்சிசுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் இயற்றிய* "இறைஞான போதம்" - *திரு. ஜி. வரதராஜப் பிள்ளை எழுதிய பத வுரையுடன்.*

*காஞ்சீபுரம் - திரு. க. வச்சிரவேல் முதலியார் எழுதிய* **"திரு உந்தியார் உரை."**

உரை நவில்வோர் :

*திரு. திவான்பகதூர் - தி. மு. நாராயணசாமிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்., திருச்சி.*

தலைமைப் பேருரை :

**தவத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

### மாலை 4 முதல் 8 மணி வரை - சைவர் மாநாடு

இறை வணக்கம், தலைவர் முன்னுரை.

சொற்பொழிவுகள் :

1. திரு. தத்புருஷ தேசிகர், தேவக்கோட்டை
—சைவர் யார்?
2. திரு. மு. அருணாசலம், எம்.ஏ., திருச்சிற்றம்பலம்
—சம்பந்தர் திரு உள்ளம்
3. திரு. கி. இராமலிங்க முதலியார், எம். ஏ., சென்னை —சுந்தரர் செந்தமிழ்
4. திரு. வித்துவான் - ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, மதுரை —ஞான உரை
5. திரு. இசைப் புலவர் - ப. சுந்தரேசம் பிள்ளை, கும்பகோணம்—செம்பாலை (திருத்தாண்டகம்)

---

(31 – 12 – 66) சனிக்கிழமை

### உறுப்பினர் ஆண்டுப் பொதுக் கூட்ட அறிவிப்பு

காலை 9 முதல் 1 மணி வரை சமாஜ உறுப்பினர் ஆண்டுப் பொதுக்கூட்டம். கூடுமிடம் மௌன மடம். உறுப்பினர்கள் மட்டும் தவறாது வருக.

1. 1966-ஆம் ஆண்டு அறிக்கையும் கணக்கும் அங்கீகரித்தல்.
2. 1967-ஆம் ஆண்டுக்கு ஆலுவலர் தேர்தல்.
3. சமாஜக் கட்டட அபிவிருத்தி.
4. தீர்மானங்கள்.

மாலை 4 முதல் 8 மணி வரை - **சைவர் மாநாடு**

இறை வணக்கம், தலைவர் முன்னுரை.

சொற்பொழிவுகள் :

1. திரு. இராதாகிருஷ்ணன், எம். ஏ., திருச்சி
   —பெரிய புராணத்தில் மனை வாழ்க்கை
2. திரு. பூ. ஆலாலசுந்தரம் செட்டியார், எம். ஏ., தாம்பரம்
   — அப்பர் தேவாரத்தில் இலக்கியச் சுவை
3. திரு. வித்துவான் - க. வெள்ளைவாரணனார், அண்ணாமலைநகர்
   —திருமுறைகளும் சித்தாந்தக் கருத்துக்களும்
4. திரு. வித்துவான் - அ. நடேச முதலியார், அண்ணாமலைநகர் —சாத்திரமும் தமிழும்
5. திரு. க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., காஞ்சீபுரம் —திரு உந்தியார்

---

(1 – 1 – 67) ஞாயிற்றுக்கிழமை

காலை 9 மணி முதல் 1 மணி வரை

**திருமுறை இசை அரங்கு**

**தத்துவக் கருத்தரங்கு** - பொருள் : " திருவெம்பாவை "

(குறிப்பு :—அரங்கில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் செயலரிடம் பெயர் கொடுக்கவும்.)

---

மாலை 4 முதல் 7 மணி வரை - **சைவ இளைஞர் மாநாடு**

இறை வணக்கம்.

தலைமை உரை :

திரு. காசிநாத துரை, எம். பி.

சொற்பொழிவுகள் :

1. திரு. இலஞ்சி. அ. இ. முத்துக்குமாரசாமி, திருச்சி —அப்பர் அருள்வாக்கு

2. திரு. வித்துவான் - கு. சுந்தரமூர்த்தி, திருப்பனந்தாள் —சாத்திரங்களின் சுவைநலம்

3. திரு. ஆதி. முருகவேள், எம். ஏ., திருச்சி —அருட்பயன்

4. திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்., சென்னை —நந்தி உரைத்தருளும் ஞான நூல்

5. திரு. வித்துவான்-அருணைவடிவேல் முதலியார், தருமபுரம் —சிவப்பிரகாசத்தில் திருமுறைக் கருத்துக்கள்

6. திரு. ஜான் கிரேஸ் (Connecticut, U. S. A.) —Human Will in Saiva Siddhanta

இரவு 7 முதல் 8 மணி வரை

தலைவர் முடிவுரை.

செயலாளர், வரவேற்பாளர் நன்றி உரை. வாழ்த்து.

---

குறிப்பு:—(1) மாநாட்டில் சமாஜ வெளியீடுகள் விலைக்குக் கிடைக்கும். சமாஜ உறுப்பினர் கட்டணம், ஆங்கில முத்திங்கள் இதழ் கட்டணம் மாநாட்டில் செலுத்தலாம். (2) தீர்மானங்களை அனுப்பும் அங்கத்தினர் சமாஜச் செயலாளர் பேருக்கு சமாஜ முகவரிக்கு 25-12-66 தேதிக்குள் அனுப்புக. (3) உறைவிடம் தேவையுள்ள சமாஜ உறுப்பினர்கள் 25-12-66 தேதிக்குள், வரவேற்புக் குழுச் செயலாளர், திரு. சொ. கிருஷ்ணன், 33, புதுத்தெரு சந்து, ஆண்டார் தெரு, திருச்சி - 2 என்ற முகவரிக்கு எழுதுக. (4) உறுப்பினர்கள் மட்டும் தங்க, மலையில் மௌன மடத்தில் ஏற்பாடு செய்யப்பெற்றுள்ளது. (5) மாநாட்டுச் சொற்பொழிவுகளைக் கேட்பதற்கான வசதி மாத்திரம் உறுப்பினர் அல்லாதவர்களுக்கு உண்டு.

முருகன் அச்சகம், சென்னை - 14

Reg. M. 2330 ட

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 39 | பராபவ மார்கழி 1966 டிசம்பர் | இதழ் 12

## சைவப் பெருமக்கள் கடமை

(ஆசிரியர்)

இம்மாதம் 30, 31 1967 ஜனவரி 1 ஆகிய தேதிகளில் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் 61ஆம் ஆண்டு விழாவும் சைவர் மகாநாடு முதலியனவும், தாயுமான செல்வனாக எம்பெருமான் எழுந்தருளியுள்ள திரிசிராப்பள்ளியில் நடைபெறுகின்றன. விவரங்களைத் தனியே காணலாம். இதற்கு முன், 1941இல் இங்கு சமாஜ மகாநாடு ஞானியார் சுவாமிகள் தலைமையில் நடந்தது. மீண்டும் இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் இப்போது கூடுவது மகிழ்ச்சிக்குரியது. இந்த நிலையில் நமது கடமையைச் சற்றே நினைவு கூர்வது அவசியமாகும்.

இந்தியா சுதந்திரம் பெற்று இருபது ஆண்டுகள் ஆயின. நாம் நம்மை ஒரு ஜனநாயகக் குடியரசாக அமைத்துக் கொண்டிருக்கிறோம். இந்த இருபது ஆண்டுகளில் நாம் என்ன சாதித்திருக்கிறோம் என்பதை எண்ணிப்பார்த்தால், எந்த இந்தியனும் தலை குனியாமல் இருக்க முடியாது. இந்த ஆண்டில் நம் நாட்டில் எல்லா விபரீதங்களும் ஒருசேர நிகழ்ந்திருக்கின்றன. மழையில்லாது சாகுபடி பாதிக்கப்

பட்டு உணவுப் பஞ்சம் மிக்க துன்பம் விளைவித்திருக்கிறது. அதை அடுத்து, கனமழை பெய்து விளைந்த பயிரில் ஒரு பகுதி வெள்ளத்தில் நாசமாயிற்று. நாட்டில், முக்கியமாகத் தமிழ்நாட்டில், பல இடங்களில் பெரும்புயல் அடித்து, மிக உயிர்ச்சேதமும், பொருட்சேதமும் விளைவித்திருக்கிறது. இவை இயற்கையால் ஏற்பட்ட சோதனைகள்.

மக்களால் ஏற்பட்ட கொடுமையோ இன்னும் பல மடங்கு துயரமுடையது. மொழி வெறியும், இனவெறியும் கொண்ட மக்கள், தாங்கள் நாட்டை எவ்வளவு பாழ் படுத்துகிறோம் என்பதை உணராது, ரயில்வே நிலையங்கள், ரயில் பாதைகள், அரசாங்கத்தின் காரியாலயங்கள், நாட்டின் பொதுச் சொத்தான ரயில், பஸ் போன்றவற்றைத் தீக் கிரையாக்கினார்கள். மாணாக்கர் பேரால் தீயமக்கள் பள்ளி களை அழித்தார்கள். இப்படிப்பட்ட அரக்கச் செயல்கள் இன்னும் நடைபெறுகின்றன. பசுவதையை நிறுத்த வேண்டுமென்று சொல்லி, கிளர்ச்சிக்காரர்களும் அராஜகத் தாரும் ஒன்று சேர்ந்து கொலையும் கொள்ளையும் தீவைத் தலும் செய்திருக்கிறார்கள்.

இவை யாவும் நாம் வெட்கித் தலை குனியவேண்டிய செய்திகள். நாகரிகம் படைத்த எந்தக் குடிமகனும் இவற்றை எண்ணி வெட்கிக் கண்ணீர் விடாமல் இருக்க முடியாது. இரண்டாவது உலகயுத்தத்தின் பின் முன்னமே சர்வாதிகார ஆட்சியில் ஒடுக்கிக்கிடந்த சீனாவானது, ஒற்றுமைப்பட்டு, குடியரசாக ஓங்கி, வளர்ந்து, வீறு கொண்டெழுந்து இன்று ஏக காலத்தில் அமெரிக்காவையும் ரஷ்யாவையும் எதிர்க்கத் துணிந்து நிற்கிறது. நம் எல்லை யில் உள்புகுந்து, நம் நாட்டின் பல பகுதிகளைக் கவர்ந்து கொண்டு, நமக்குப் பேராபத்தாக இருக்கிறது. அது செய்கிற அக்கிரமங்களை நாம் வன்மையாகக் கண்டித்த போதிலும், பத்து ஆண்டுகளில் உலகப் பேரரசுகளில் ஒன்றாக வளர்ந்து இருப்பதைக் கண்டு வியக்காமலிருக்க முடியாது.

அதே சமயத்தில், இருபது ஆண்டுகளில் இந்தியா அடைந்துள்ள நிலைமையை மேலே குறிப்பிட்டோம். இந்த நிலைமையில் சைவர் என்பவர் ஒவ்வொருவரும் தம்முடைய கடமையைச் சற்றே சிந்தித்துப் பார்க்க வேண்டும். கல்விச் சாலைகளில் படிப்பவர்கள் நம்முடைய குழந்தைகளே. நம் குழந்தைகளைப் பெரியோரிடத்தில் மரியாதையுடையவராக, கல்வியில் கருத்துடையவராக, சமய ஒழுக்கத்தில் தலை சிறந்தவராக, தீமை செய்யாதவராக, தீமைக்குப் பணியாத வராக நாம் வளர்த்தால், பள்ளியில் இவ்வித வளர்ச்சி பெறாது வளர்ந்து வந்துள்ள பிள்ளைகளால் வரும் ஒழுங் கீனங்கள் குறையும். இன்று பள்ளியில் படிக்கும் சிறு மாணாக்கன் நாளை பதவியிலமர்ந்து நாட்டை நடத்து கின்றான். எனவே, இளம்பிள்ளை வாழ்க்கைதான் அவன் பள்ளி வாழ்க்கையை மட்டுமல்ல, நாட்டு வாழ்க்கை முழுமை யுமே ஒழுங்கு படுத்துகிறது.

இதை நாம் நன்குணர்கிறோம். ஆனால் உணர்ந்து நம் கடமையைச் செவ்வனே நிறைவேற்றுவதில் பரா முகமாய் இருக்கிறோம். எதிர்கால இந்திய உலகமும், சைவ உலகமும் செம்மையாக இருக்க வேண்டுமானால், அது நம் பிள்ளைகளை எப்படி வளர்க்கிறோம் என்பதைப் பொறுத் திருக்கிறது. குடும்ப வாழ்க்கையில் சைவ மணம் கமழ வேண்டும். பெரியோரும், பிள்ளைகளும் தவறாமல் கோயிலுக்குப் போக வேண்டும். கோயில் அருகில் இல்லாதபோது, இல்லத்திலேயே இறை வழிபாடு செய்தல் வேண்டும். திருநீறு முறையாக அணிதல் வேண்டும். திருமுறைகளை நாள்தோறும் ஓத வேண்டும். இந்த மூவகைப் பயிற்சியும் ஒருவகை ஒழுங்கைத் தருவதோடு கூட, உள்ளத்தில் சிறந்த உறுதியையும் வலிமையையும் தருகிறது. இந்த உறுதியும் வலிமையும் சிறு பிள்ளையின் பள்ளி வாழ்க்கையில் அருந்துணை யாக நிற்கும். பள்ளியில் படிக்கும் சைவப் பிள்ளைகள் அனைவரும் இத்துணையைப் பெற்றிருக்கும் காலத்தில் பள்ளி

இந்த வலிமையுடையோர் வழியாக இயங்குமேயன்றி ஒழுக்கவீனர் வழியாக இயங்காது.

அறிவுடையவன் உலகம் போகிற வழியே நானும் போகிறேன் என்று கூறமாட்டான். உலகை எதிர்த்துச் சரியான வழியே நான் போவேன் என்று உறுதிபூண்டு நடப்பான். எல்லோரும் புகைப் பிடிக்கிறார்கள் என்றால், நம் பிள்ளைகள் புகைப் பிடிக்காமல் காப்பது நம் கடமை. எல்லோரும் புலால் கடையை நோக்கி நடக்கிறார்கள் என்றால், நம் பிள்ளைகள் சைவஉணவு கொள்வதே உடலுக்கு உறுதியானது என்ற வைராக்கிய உணர்வு பெறும்படி நாம் செய்ய வேண்டும். சினிமாவும் இவற்றுடன் சேர்க்கத் தக்கதே.

பிள்ளைகளுக்கு இவ்விதமான வைராக்கிய உணர்வு தருவதில் நாயன்மார்கள் வரலாறுகள் துணை செய்யும். அவ்வரலாறுகளில் பெரியோர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டும். ஓநாயும் ஆட்டுக் குட்டியும் என்ற கதையை நம்புகின்ற குழந்தை, அப்பர் வாழ்க்கையையும், அப்பூதி வாழ்க்கையையும், கலயரையும், கண்ணப்பரையும் நம்பாமல் போகாது. மோகனதாஸ்காம்சந்த் என்ற சிறு பையன் அரிச்சந்திரன் கதையையும், பிரகலாதன் கதையையும் கண்டு வாழ்க்கையை நெறிப்படுத்திக் கொண்டு, செயற்கரிய செய்தான் என்று நம் கண் முன் கண்டோம். பலர் இவ்வாறு செய்ய முடியும் என்று நாம் நம்பவேண்டும். நம்பிக்கை இன்மையே சீர்கேடு அனைத்துக்கும் வித்து.

சைவமக்கள் இங்குக் கூறியவற்றுள் தங்கள் கருத்தைச் செலுத்துவார்களாக. நம்மைச் சூழ்ந்து இஸ்லாமும் கிறித்துவமும் என்ன வேகத்தில் வளர்கின்றன என்பதைக் காணாதவர் இருக்க முடியாது. யாரிடமும் நமக்குப் பகைமையில்லை. நம்சமயத்தை அரண்செய்து வளர்ப்பது நம் பொறுப்பு. சைவசமயம் அனாதி காலமாக உலகில் தோன்றி, வளர்ந்து விளங்குவது. பலகோடி மக்களுடைய வாழ்க்கையைப் பல்லாயிரமாண்டுகளாக நெறிப்படுத்தி வந்திருக்கிறது. அவ்வாறு இனியும் என்றும் நெறிப்படுத்த வேண்டுமென்பதே நம்முடைய ஆசை. திருவருள் துணை நிற்க. ❖

## சந்தா நேயர்களுக்கு வேண்டுகோள்

சமாஜஉறுப்பினர் தங்கள் சந்தாத் தொகை ரூபாய்மூன்று 31–12–66க்குள் அனுப்பி வைக்க வேண்டுகின்றோம். வி. பி. பியில் ஜனவரி மாத இதழை அனுப்புவதாயின் 75 காசுகள் வீணாக அதிகம் செலுத்த வேண்டியிருக்கும். மணியார்டர் மூலம் சந்தா அனுப்புவோர் 1. தங்கள் முழுப் பெயர். 2. சந்தா எண். 3. தெளிவான முகவரி. 4. மாவட்டம் ஆகியவற்றைக் குறித்தனுப்புதல் வேண்டும்.

ஈழ நாட்டில் உள்ள அன்பர்கள் தங்கள் சந்தாத் தொகையினை அரசியலார் இசைவு பெற்றுத் தவறாது அனுப்பிவைக்கக் கேட்டுக் கொள்கிறோம்.

மலேசியா நாட்டில் உள்ள சமாஜ அன்பர்கள் தங்கள் தங்கள் சந்தாத் தொகையை திரு. சிவநேசன் அவர்களிடத்துச் செலுத்துமாறு கேட்டுக் கொள்கிறோம்.

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :—

**செயலாளர், சைவ சித்தாந்த மகா சமாஜம்,**
**12, கிழ மாட வீதி, மயிலாப்பூர், சென்னை–4.**



## திருச்சி மாவட்டத் தேவாரப் பதிக ஊர்கள் (20)

(தி. கி. நாராயணசாமி நாயுடு)

குறிப்புகள் : அ–அப்பர், ச–சம்பந்தர், சு–சுந்தரர், மூ–மூவர்

[ ] கோயில் பெயர். ( ) வழங்கும் பெயர். * திருமுறை எண், பதிக எண், பதிக முதல்–குறிப்பு பண். || திருவிராகம். £ கூடல் சதுக்கம்.

ஊர்கள் பெயர் முன் 'திரு' சேர்த்துப் படிக்கவும்.

1 அன்பில் [ஆலந்துறை] (ச–அ.)
*1/33 கணைநீடெரி– தக்கராகம்
5/80 வானஞ்சேர் –2

2 ஆனைக்கா (மூ)
2/23 மழையார்–இந்தளம்
|| 3/53 வானைக்காவில்– கௌசிகம்

|| 3/109 மண்ணது–
பழம் பஞ்சுரம்
5/31 கோனை
6/62 எத்தாயர்
6/63 முன்றுனை
7/75 மறைகள்–காந்தா
ரம் -7

3 ஈங்கோய் மலை (ச)
1/70 வானத்துயர்–
தக்கேசி -1

4 உறையூர் [மூக்கீச்சுரம்]
(ச)
2/120 சாந்தம்–செவ்
வழி–1

5 எறும்பியூர் (அ)
5/74 விரும்பி
6/91 பன்னிய -2

6 கடம்பந்துறை [குளித்
தலை] (அ)
5/18 முற்றிலா -1

7 கருவூர் [ஆன்–நிலை] (ச)
2/28 தொண்டெ–இந்
தளம் -1

8 கற்குடி (உய்யக்
கொண்டான்மலை) (மூ)
1/43 வடந்திகழ்–தக்க
ராகம்
6/60 மூத்தவனை
7/27 விடையாரும்–
நட்டராகம் -3

9 கோவந்தபுத்தூர்
[விசயமங்கை] (ச-அ.)
3/17 மருவமர்–காந்தார
பஞ்சமம்
5/71 குசையும் -2

10 சிராப்பள்ளி (ச–அ)
1/98 நன்றுடையானை–
குறிஞ்சி
5/85 மட்டுவார்குழல்–2

11 நெடுங்களம் (ச)
1/52 மறையுடையாய்–
பழந்தக்கராகம் -1

12 பராய்த்துறை (ச-அ)
1/135 நீறு சேர்வது–
மேகராகக்குறிஞ்சி
5/30 கரப்பர் -2

13 பழுவூர் (ச)
2/34 || முத்தனே-இந்
தளம் -1

14 பாச்சில் [ஆச்சிராமம்]
(திருவாசி) ச-சு
1/44 துணிவளர்–
தக்கராகம்
7/14 வைத்தனன் -2

15 பால்–துறை (ச)
1/56 காரார்–பழந்தக்க
ராகம் -1

16 பைஞ்ஞீலி (மூ)
3/14 ஆரிடம்–காந்தார
பஞ்சமம்
5/41 உடையர்
7/36 காருலா-கொல்லி-3

17 மழபாடி (மூ)
2/9 களையும்–இந்தளம்
3/28 காலையார்-கொல்லி
3/48 அங்கை-கௌசிகம்
6/39 நீறுஏறு
6/40 அலைஅடுத்த
7/24 பொன்னார்–நட்ட
ராகம் -6

18 மாந்துறை (ச)
2/110 செம்பொன்னூர்-
நட்டராகம் -1

19 வாட்போக்கி [ஐயர்மலை,
ரத்னகிரி (அ)
5/86 காலபாசம்

20 வெஞ்சமாகூடல் (சு)
7/42 எறிக்குங்கதிர்-
கொல்லிக்கௌவாணம்-1

ஆக பதிகங்கள் 41

இவ்வூர்களில் உள்ள கல்வெட்டுக்களின் விபரத்திற்கு 'சித்தாந்தம்' தொகுதி 38 (1965) பக்கம் 345 பார்க்க.

இவற்றில் காவிரிக்குத் தென்கரை ஊர்கள்—8. அவை :

1 வாட்போக்கி (ஐயர்மலை, ரத்னகிரி)
2 கடம்பந்துறை (குளித்தலை)
3 பராய்த்துறை
4 கற்குடி (உய்யக் கொண்டான்மலை)
5 உறையூர் [மூக்கீச்சுரம்]
6 சிராப்பள்ளி
7 எறும்பியூர்
8 நெடுங்களம் என்பன.

காவிரிக்கு வடகரை ஊர்கள் 10 (9 முதல் 18) அவை :

9 ஈங்கோய்மலை
10 அன்பில் [ஆலந்துறை]
11 மாந்துறை
12 பைஞ்ஞீலி
13 பாச்சில் [ஆச்சிராமம்] (திருவாசி)
14 மழபாடி
15 பழுவூர்—கீழப்
16 கோவந்தபுத்தூர் [விசயமங்கை]

இவற்றில் 7 (10 முதல் 16) ஊர்கள் கொள்ளிட வடகரை ஊர்கள்

திரு அரங்கத் திடலில் 2 ஊர்கள். அவை :

17 பால்—துறை
18 ஆனைக்கா.

17-ம் 18-ம் காவிரிக்கும் அதன் கிளை ஆறு கொள்ளிடத்திற்கும் இடையில் ஆற்றிடைக்குறையில் உள்ளன.

கொங்குநாட்டு ஊர்கள்

19 கருவூர்—[ஆன்-நிலை]
20 வெஞ்சமாகூடல்

இவை 2-ம் இந்த மாவட்ட எல்லையில் உள்ளன.

ஆழ்வார்கள் பாடிச் சிறப்பித்தவை

1 அரங்கம்
2 வெள்ளறை (உய்யக் கொண்டார் பிறந்தது)
3 அன்பில்
4 உறையூர் (திருப்பாணாழ்வார் பிறந்தது)
5 கரம்பனூர் (உத்தமர் கோயில்,
6 திருமயம்

இவற்றில் அன்பிலும், உறையூரும் தேவாரப் பதிகம் பெற்ற ஊர்கள். உறையூர், காவிரித் தென்கரையில் உள்ளது. திருமயம் புதுக்கோட்டை வட்டத்தில் இருப்பது. திரு அரங்கம் காவிரிக்கு வடக்கிலும் கொள்ளிடத்தின் தெற்கிலும் உள்ளது. ஆனைக்கா பால்-துறை, திரு அரங்கத்துடன் ஆற்றிடைத் திட்டில் உள்ளவை. ஏனைய 3-ம் கொள்ளிட வட கரை ஊர்கள்.

1 மூவர் பதிகமும் பெற்றவை (4) :

1 ஆனைக்கா, 2 கற்குடி (உய்யக்கொண்டான்மலை), 3 பைஞ்ஞீலி, 4 மழபாடி.

2 சம்பந்தர் பதிகம் மட்டும் பெற்றவை (7) :

1 ஈங்கோய்மலை
2 உறையூர்
3 கருவூர்
4 நெடுங்களம்
5 பழுவூர் கீழப்
6 பால்-துறை
7 மாந்துறை.

3 அப்பர் பதிகம் மட்டும் பெற்றவை (3) :

1 எறும்பியூர், 2 கடம்பந்துறை (குளித்தலை)
3 வாள்-போக்கி (ஐயர் மலை).

4 அப்பரும் சம்பந்தரும் பாடிய பதிகங்கள் பெற்றவை (4) :

1 அன்பில், 2 கோவந்தபுத்தூர், 3 சிராப்பள்ளி, 4 பராய்த்துறை.

5 சுந்தரர் பதிகம் மட்டும் பெற்றது (1) :
வெஞ்சமாகூடல்.

6 சம்பந்தரும் சுந்தரரும் பாடிய பதிகங்கள் பெற்றது (1) :
பாச்சில்.

ஆக ஊர்கள் 20

திருமுறைப்படி வரும் பண், பதிக எண், ஊர் வருமாறு :

I. தக்கராகம் (3), 33 அன்பில், 43 கற்குடி, 44 பாச்சில்; பழந்தக்கராகம் (2) 52 நெடுங்களம், 56 பால்-துறை; தக்கேசி, 70 ஈங்கோய்மலை; குறிஞ்சி, 98 சிராப்பள்ளி; மேகராகக்குறிஞ்சி, 135 பராய்த்துறை. || 8

II. இந்தளம் (4) 9 மழபாடி, 23 ஆனைக்கா, 28 கருவூர், 34 பழுவூர்.
|| நட்டராகம் (1) 110 மாந்துறை
செவ்வழி (1) 120 உறையூர் 6

III. காந்தாரபஞ்சமம் (2) 14 பைஞ்ஞீலி, 17 கோவந்த புத்தூர்
£ கொல்லி (1) 28 மழபாடி
கௌசிகம் (2) 48 மழபாடி, 53 ஆனைக்கா 6
பழம் பஞ்சுரம் (1) 109 ஆனைக்கா

IV. இல்லை

V. குறுந்தொகை
18 கடம்பந்துறை 74 எறும்பியூர்
30 பராய்த்துறை 80 அன்பில்
31 ஆனைக்கா 85 சிராப்பள்ளி
41 பைஞ்ஞீலி 86 வாள்போக்கி
71 கோவந்தபுத்தூர் 9

VI. தாண்டகம்
39, 40 மழபாடி 62, 63 ஆனைக்கா
60 கற்குடி 91 எறும்பியூர்

VII * தக்கராகம் 14 பாச்சில் 6
|| நட்டராகம் (2) 24 மழபாடி, 27 கற்குடி
£ கொல்லி 36 பைஞ்ஞீலி
கொல்லிகௌவாணம் 42 வெஞ்சமாகூடல்
காந்தாரம் 74 ஆனைக்கா 6

தக்கராகம் 1, 7 நட்டராகம் 2, 7, கொல்லி 3, 7, திருமுறைகளில் வருவது காண்க.

வழிக்குறிப்புகள் :— திருச்சி மலைக் கோட்டைத் தெப்பக் குளத்திலிருந்து சிராப்பள்ளிமலை, உறையூர், கற்குடி (உய்யக் கொண்டான் மலை) வயலூர் : திருச்சி-தஞ்சை சாலை வழி எறும்பியூர் (கேல்), நெடுங்களம் : (துவாகுடி இறங்கி 2 கல்) திருச்சி-முசிறி-நாமக்கல் சாலை வழி பாச்சில் (7கல்) ஈங்கோய்மலை (முசிறிக்கு அடுத்த 2வது கல் : கொள்ளிடம் கடந்து லால்குடி சாலை வழி மாந்துறை, தவத்

துறை(லால்குடி)-அன்பில்; காவிரி கடந்து அரங்கம், ஆனைக்கா, பால்-துறை (திருவளர் சோலை பஸ்); காவிரி தென்கரை திருச்சி-கரூர் சாலை வழி பராய்த்துறை, கடம்பந்துறை (குளித்தலை 23 கல்) வாட்போக்கி (ஐயர் மலை, குளித்தலை-மணப்பாறை சாலையில் 5 கல்) கரூர், வெஞ்சமாகூடல் (கருவூர்-அரவக் குறிச்சி வழி 11 வது கல் ஒந்தாம்பட்டியிலிருந்து 3 கல்) : மழபாடி, பழுவூர், கோவந்தபுத்தூர்தொடர்ந்து தனித் தனியாகக் காணலாம். ஐயாற்றிலிருந்து மழபாடி பழுவூரும் புறம்பயத்திலிருந்து கோவந்த புத்தூரும் கொள்ளிடத்தைக் கடந்து காணத்தக்கவை. ஆனுயர் மங்கலவூர் லால்குடிக்கு அண்மையிலும், பிடவூர், திருப்பட்டூர், திருக்கயிலாயஞான வுலாவை சேரமான் பெருமாள் வெளியிட்டது. திருச்சி-பெரம்பலூர் வழியில் ஊட்டத்தூர் இறங்கியும் காணலாம். சோழ வரலாற்றில் சிறந்த கல்அணை, காமரசவல்லி சமயபுரம் மாரி அம்மன் காணத்தக்கவை, எல்லாவற்றிற்கும் பஸ் வசதிகள் உண்டு.



# பிறர் பார்வையில் நம் சமயம்

## ஆல்பர்ட் சுவிட்சர் (Albert Scheveitzer)

கொ. நீ. சிங்காரவேலு, M. A.,

(சென்ற இதழின் தொடர்ச்சி)

### பௌத்தம் :—

புத்தர் தம் எண்பதாவது வயதில் சுமார் கி. மு. 485ல் உயிர் நீத்தார். அவருடைய அறவுரைகள் இந்தியாவின் வடகிழக்குப் பிரதேசத்தில் பேசிவந்த பாலி மொழியில் எழுதப்பட்டன. தம் சீடர்களைத் தாய்மொழியில்தான், தம் கொள்கைகளைப் பரப்பவேண்டுமென்று பணித்தார்.

புத்தர் ஒரு சமூக சீர்திருத்தக்காரர். அவர் கொள்கைகள் மார்டின் லூதர் அவர்களை ஞாபகப்படுத்துகின்றன.

புத்தர், உலக இன்பத்தைத் துய்த்தலே வாழ்க்கையின் குறிக்கோள் என்னும் போக்கையும் அதற்கு நேர்மாறாக உலகத்தை வெறுத்துத் தங்களை ஒறுத்தலையே குறிக்கோளாகக் கொள்ளும் போக்கையும் கண்டித்தார். அவர் உள்ளத் தூய்மைக்கே மதிப்புக் கொடுத்தார். உள்ளம் பற்றற்றுத் தூய்மையாக இருந்தால் இயற்கையான தேவைகளை நிறைவு செய்வதில் தவறில்லை என்று கருதினர். அவர் தம் உடம்பைப் பல துன்பங்களுக்கு ஆளாக்கியபோது மெய்யறிவு பெறவில்லை; உணவு அருந்தியபின் தான் மெய்யறிவு பெற்றார்.

புத்தர் கொள்கைப்படி எவனொருவன் தூய்மையான மனம் உடையவனாக இருக்கிறானோ எவனொருவன் உலக முழுவதற்கும் கருணை சுரக்கும் இன்ப உணர்ச்சியுடையவனாக இருக்கிறானோ அவனே உலகப்பற்றை விட்டவனாவான். அவர் கொள்கைப்படி தியானத்தில் ஒழுக்கவியலும் அடங்கியுள்ளது.

புத்த மதம் இந்தியாவில் மறைந்தொழிந்தது. ஆனால் பழங்கால பௌத்தம் (ஹீனயான) இலங்கையில் இருக்கிறது. பிற்கால பௌத்தம் (மஹாயான) நேபால், சைனா, திபத், கொரியா, ஜப்பான் ஆகிய தேசங்களில் நிலவுகின்றது.

இந்தியாவிலிருந்து பௌத்தம் ஒழிந்ததற்குக் காரணம் இந்துக் கொள்கை பௌத்தக் கொள்கையைக் காட்டிலும் ஆழமும் அகலமும் உடையது. பௌத்தம் பிறப் பிறப்பாகிய சுழற்சியிலிருந்து விடுதலையடைவதைப் பற்றி மாத்திரம் கூறுகிறது. ஆனால் இந்து மதமோ இக்கொள்கையோடு ஒரு பரம்பொருளுடன் இணைவதையும் கூறுகிறது.

பிற்காலத்துப் பிராமணியம் :—

பிரம்ம சூத்திரம் :—

பிற்காலத்துப் பிராமணியம் அல்லது வேதாந்தக் கொள்கைகள் பாதராயணர் எழுதிய பிரம்ம சூத்திரங்களில்

உருவம் பெற்றன. இவர் சுமார் கி. பி. 4ஆம் நூற்றாண்டில் இருந்தவர். சூத்திரம் என்றால் இழை என்பது பொருள். பின் விதி என்று பொருளாயிற்று. இந்நூலில் 555 சூத்திரங்கள் உள்ளன.

சாங்கிய, பௌத்த ஜைனக் கொள்கைகளை மறுக்கும் நோக்கத்தோடு உபநிஷத் கருத்துக்களைக் கையாள்கின்றது இந்நூல். ஆனால் இந்நூலால்கூட உபநிஷதக் கருத்துக்களுக்கு முன் பின் இணைவு (Consistency) தரமுடியாது.

**சங்கரர் :—**

சங்கரர் பிரம்ம சூத்திரத்தை முற்றிலும் பின்பற்றவில்லை. பல இடங்களில் தம் கொள்கைகளைப் பிரம்ம சூத்திரத்தில் ஏற்றுகிறார்.

பிற்காலத்துப் பௌத்தம் போல இவரும் ஐம்புலன்களால் அறியப்படும் உலகம் வெறும் கற்பனை உலகம் என்று நம்புகிறார். ஆனால் இடைவிடாது கற்பனை செய்வதால் உலகம் நடைமுறைக்கு உண்மைப் பொருளாகின்றது என்று கூறுகிறார்.

பிற்காலத்துப் பௌத்தம் போலவே சங்கரருக்கும் இரண்டு தரத்து உண்மைப் பொருள்கள் உண்டு. உண்மையை, மேலான உண்மைப்பொருள், கீழ்த்தரத்து உண்மைப் பொருள் என்று இருகூறாகப் பிரிக்கிறார். மனிதன், தானும் பிரமமும் வேற்றுமை அற்ற பொருள் என்பதை ஆராய்ச்சியால் அறிந்து அதுவேயாக யிருப்பது மேலான உண்மைப் பொருள். கீழ்த் தரத்து உண்மைப் பொருள் மனிதன் பிறந்திறந்து விடுதலை அடைவது. ஐம்புலன்களால் அறியப்படும் உலகை மெய்ப்பொருள் என்று நம்பி, பிரமத்தின் உண்மை நிலையை அறியாது அதைத் தெய்வமாகப் பாவித்துத் தொழுவது கீழ்த் தரத்து உண்மையாகும் என்கிறார். உபநிஷத்திலும் இவ்விரண்டு தரத்து உண்மை நிலைகள் வேறுபடுத்திக் கூறப்படுகிறன என்று சங்கரர் தவறாகக் கூறுகிறார்.

பிரமத்தைத் தெய்வமாகப் பாவித்துத் தொழுது பிறப்பிறப்பிலிருந்து விடுதலை பெற்றுப் பேரின்பம் அடைகிறவர்கள் கீழ்நிலை உண்மைப் பேற்றைத்தான் அடைகிறார்கள் என்றும், யுகாந்தர முடிவில் கீழ்நிலைப்பேறு, பிரமத்தோடு ஒன்றுபடுகின்றது என்றும் கூறுகிறார்.

சங்கரர் ஏன் இவ்வாறு இரண்டு உண்மை நிலைகளைக் கூறி இடர்ப்படுகிறார் என்றால், அவர் காலத்திலேயே மனிதனுக்கு வேறாய பரம்பொருள் ஒன்றுண்டு; அதை அன்பால், பக்தியால் அடையலாம் என்ற இந்துக் கொள்கை வலுத்துவிட்டது. ஆகையால் பிராமணியம் இக் கொள்கையைப் புறக்கணிப்பதற்கில்லை. பிராமணியம் இதை மறுத்தாகவேண்டும். அல்லது இதற்குத் தம் கொள்கைகளில் இடம் கொடுத்தாக வேண்டும். ஆகையால் இரண்டாவது வழியைத்தான் பின்பற்ற வேண்டியிருக்கிறது. இதனால்தான் சங்கரர் இறைவனைத் தொழுது பேரின்பநிலை அடைவதை இரண்டாந்தர நிலையென்று கூற நேர்ந்தது.

இறைவனுக்கு இடைவிடாது அன்பு செலுத்தி இறைவனை அடையும் கொள்கை பிராமணிய பிரம்மக் கொள்கையைக் காட்டிலும் உயர்ந்தது; செயல்முறைக்கு ஒத்தது; உயிர்த் துடிப்புடையது. இக் கொள்கையில் ஒழுக்கவியலுக்கு இடமுண்டு. காலப்போக்கில் இக்கொள்கை பிரம்மக் கொள்கையை வெல்லும் என்பதில் ஐயமில்லை.

சங்கரர் கொள்கைகளில் ஒழுக்கவியலுக்கு முக்கியத்துவம் இல்லை. பிறப்பிறப்பிலிருந்து விடுதலையடைவதற்கு ஞானம் மாத்திரம் போதாது. ஒழுக்கவியலும் தேவை என்ற கொள்கையை மறுக்கிறார். உலகம் மாயை என்ற கொள்கையில் ஒழுக்கவியல் இடம் பெற வழியில்லை.

### பக்தி மார்க்கம்

சிவன், காளி ஆகிய கடவுள் கொள்கைகள் திராவிடக் கொள்கைகள். கருமை நிறக் கடவுளாகிய கிருஷ்ணனும்

திராவிடர்களிடமிருந்து தொடங்கியிருக்கலாம். வேதத்தில் விஷ்ணுவிற்கு முதன்மையில்லை. பிற்காலத்தில் விஷ்ணுவின் நிலை உயர்ந்தது.

பக்திக் கொள்கைக்குத் தாயகம் தென்னாடு என்று கூற இடமுண்டு. பிராமணியக் கொள்கைகளில் பக்திக்கும் இடம் தந்த சங்கரர் தென்னாட்டிலிருந்து வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

## பகவத் கீதை

இது கி.மு. மூன்றும் நூற்றாண்டு நூலாக இருக்கலாம். முதன் முதலில் இது நூலாக எழுதப்பட்டுப் பின், மகாபாரதத்தில் நுழைக்கப்பட்டிருக்கலாம்.

உலகம் மாயை என்ற பிராமணியக் கொள்கையை இது ஒத்துக்கொள்கிறது. ஆனல் உலகத்திலிருந்து ஒதுங்கி வினை செய்யாமல் இருப்பதை ஆதரிக்கவில்லை. "மனிதன் வினையைச் செய்யாமல் விட்டுவிடுவதாலும், அதைச் செய்வதாலும், இவ்விரண்டு வகையாலும் இறைவனை அடையலாம்; ஆனல் இவ்விரண்டில் தன் கருமத்தைச் செய்யும் நெறிதான் சிறந்தது'' என்று கிருஷ்ணன் கூறுகிறார்.

ஆனல் கிருஷ்ணன் கருமம் என்று கூறுவதெல்லாம் ஜாதியின் அடிப்படையில் வகுக்கப்பட்ட ஜாதிக் கருமத்தைத்தான். ஒருவன் தன் உள்ளுணர்வால் உந்தப்பட்டு தானே ஏற்றுக் கொண்ட பொறுப்பைப் பற்றிக் கண்ணன் கூறவில்லை. பகவத் கீதையைச் சரியாகப் புரிந்து கொள்ளுகிறவர்களுக்கு இந்தக் குறுகிய நோக்கம் தட்டுப்படாமல் இருக்காது.

பகவத் கீதையில்கூட அறச்செயலுக்கு முதன்மை கொடுக்கவில்லை. இறைவனிடத்து அன்பு செலுத்துவதே முதலும் முடிவுமாகும். இறைவனிடத்துச் செலுத்தும் அன்பு மக்களிடத்து அன்பாகச் செயற்படவில்லை. இந்நூல் ஆர்வத்தோடு மக்களிடத்தில் அன்பு காரியப்பட

வேண்டும் என்று தூண்டவில்லையாகையால், இந்நூல் கொழுந்துவிட்டுப் பிரகாசிக்கவில்லை; புகையோடு கூடிய நெருப்பாகப் பயனற்றுப் போய்விடுகிறது.

## இராமானுஜர்

இராமானுஜர் (1055-1137) தம் வேதாந்த சூத்திர பாடியத்தில், உபநிஷத்திலும், வேதாந்த சூத்திரத்திலும் பிராமணியக் கொள்கையான அகம் பிரமம் என்ற கொள்கைக்கு இடமில்லை என்றும், இந்தக் கொள்கையான பக்தி மார்க்கத்தில் தான் இடமுண்டு என்றும் கூறுகிறார்.

## திருக்குறள்

இது கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம்.

பிராமணியம், பௌத்தம், பகவத் கீதை இவைகளைக் காட்டிலும் பலவகைகளில் குறள் முற்போக்குடையது. முற் குறித்த நூற்களில் மறு பிறப்பிலோ சுவர்க்கத்திலோ பலன் கிட்டும் என்ற அடிப்படையிலேயே ஒழுக்கவியல் வற்புறுத்தப் படுகிறது. ஒழுக்கவியல் பலன் கருதாது, தன் பொருட்டே வேண்டப்படுவது என்ற கொள்கை திருக்குறளில் ஒளிவிட்டு வீசுகிறது. பிற்குறித்த குறள்களைக் காண்க:—

"நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று"
"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ வுலகு"

பகவத் கீதையில் கடமை, சாதி அடிப்படையில் வகுக்கப்பட்டது. குறளின்படி எல்லா நற்செயல்களும் கடமையின் பாற்படும். அவை யாவர்க்கும் பொது.

வள்ளுவர், உலகத்தில் ஆர்வத்தோடு வினை செய்தலில் இன்பம் காண்கிறார். இது போன்ற கருத்து இந்திய சிந்தனைகளில் இதற்கு முன் காண்பதரிது. பின்வரும் குறட்பாக்களைப் பார்க்க:—

"தெய்வத்தா ளுகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"
"இன்றுமை யின்ப மெனக்கொளி னுருந்தன்
னென்ஞர் விழையுஞ் சிறப்பு"

பௌத்தம், பகவத் கீதை இவைகளைப் போல் வள்ளுவரும் உலகப் பற்றற்ற வெறுப்புணர்ச்சியற்ற, மனத்தை விரும்புகின்றார். உலக கிராகரிப்பில் பிறந்த நல்ல கருத்துக்களையெல்லாம் குறள் தனதாக்கிக் கொண்டு மேலும் ஒரு படி செல்கின்றது, அது தான் உயிர்த்துடிப்புள்ள மக்கள் மீது காட்டும் அன்பு. பின் வரும் குறட்பாக்களை ஓர்க:—

"அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு"
"அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று"
"புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு"
"அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்
பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள"

வள்ளுவர் எளிய ஒழுக்கமுள்ள சமுதாயத்தை ஐபத்திற்கு இடமின்றி அழகுறச் சித்தரிக்கிறார். பனிதன் தனக்குத்தானே செய்து கொள்ள வேண்டிய கடமைகள், மற்றவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகள், ஆகிய இன்னோரன்ன பலதரப்பட்ட கேள்விகளுக்கு வள்ளுவர் தரும் விடைகள் பெருந்தன்மை யுடையதாகவும், அறிவுக்குப் பொருத்தமாகவும் அமைந்துள்ளன. இவ்வளவு உயரிய ஞானம் செறிந்த அறவுரைகளை உலக இலக்கியங்கள் எங்கணும் பார்க்க முடியாது.

(ஜெர்மன் ஆசிரியர் கூறும் இவ்வாசகங்கள் தமிழன் உள்ளத்தைப் பூரிக்கச் செய்யும்)

## இராமானந்தர் (கி. பி. 1400)

இவர் இராமானுஜர் கொள்கையைப் பின்பற்றுபவர். தென்னாட்டிலிருந்து வடநாட்டிற்குச் சென்று அங்கு பணி யாற்றியவர். இவரால் தென்னாட்டுக் கொள்கைகள் வட நாட்டில் பரவின. இவர் வடமொழியில் வல்லவராயிருந்தும் வட நாட்டு மக்கள் எளிதில் புரிந்து கொள்வதற்காக ஹிந்தி மொழியில் தம் கருத்துக்களை வெளியிட்டார். இவருடைய சீடர்களில் பெண்களும், ஹரிஜனங்களும், முகம்மதியர் களும் உண்டு. அவர்களுக்கு வேத மந்திரங்களையும் உபதே சித்துள்ளார்.

இராமானந்தரின் முக்கிய சீடர் கபீர் ஆவார். (1440-1518) அவருடைய சீடர் நானக் (1469-1539) இவர்தான் சீக்கியர் சமுதாயத்தைத் தோற்றுவித்தார்.

## தற்காலத்து இந்திய சிந்தனைகள்

ஆல்பர்ட் சுவிட்சர் தம் நூலின் இறுதியில் இந்தியா வின் தற்காலச் சிந்தனையாளர்களின் கருத்துக்களை ஆராய்ந்து, படிப்படியாக இந்தியச் சிந்தனையில் உலகத்தை அலட்சியப்படுத்தும் மனப்பான்மை குறைந்து, ஒழுக்கவிய லுக்கும், மக்கள் தொண்டிற்கும் முக்கியத்துவம் கொடுக்கும் மனப்பான்மை மிகுத்திருந்தது என்று கூறுகிறார். அவர் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட சிந்தனையாளர்கள், இராம் மோஹன்ராய், தாபேந்திரநாத் தாகூர், கேசப்சந்திர சென், தயாநந்த சரஸ்வதி, இராமகிருஷ்ணர், விவேகாநந்தர் இராபிந்தரநாத் தாகூர், மஹாத்மாகாந்தி, அரவிந்தர் ஆவர். இவ்வாசிரியர் இராபிந்தரநாத்தாகூர் சிந்தனையிற்றான் ஒழுக்க வியல் பூரண வெற்றி பெறுகிறது என்று கூறுகிறார்.

சுவிட்சர் அவர்கள் சைவ சமய ஆசாரியர்களைப் பற்றியோ சைவ சித்தாந்த நூல்களைப் பற்றியோ ஏதும் அறிந்திலர். அறிந்திருந்தால், திருக்குறள்

மரபில் வந்த சித்தாந்த சாத்திரக் கருத்துக்கள் அவருக்கு மன நிறைவு தந்திருக்கும். சைவ சித்தாந்தத்தின் படி உலகம் உள்பொருளே; உலகம் மாயையன்று. அது வெறுக் கத்தக்க பொருளுமன்று. மனிதனின் முன்னேற்றத்திற் காகவே இறைவன் உலகத்தை மனிதனோடு தொடர்பு படுத்துகின்றான். உலகமும், பரம்பொருளும், இருளும், ஒளியும் போன்று முரண்பட்ட பொருள்களல்ல. சிறிய ஒளியும் பேரொளியும் போன்று ஒருசார் ஒரு தன்மைப் பட்ட பொருள் களே. இதுபோன்ற சித்தாந்தக் கருத்துக் கள் சுவிட்சர் அவர்களுக்குப் பிடித்திருக்கும்.

சுவிட்சர் அவர்களின் முக்கிய கருத்து இறைவனை மக்கள் தொண்டில் காண வேண்டும், செயற்படும் அன்பில் காணவேண்டும். இவ்வுலகத்தில், இல்வாழ்க்கையில், எல்லா உயிர்களிடத்திலும், காணவேண்டும் என்பதாகும். இக் கருத்து இப்போதுதான் இந்தியச் சிந்தனைகளில் மேலோங்குகிறது என்று அவர் கருதுகிறார்.

அவர் வள்ளலார் பாடல்களைப் படித்திருந்தால், இந்து சமயத்தின் உச்ச நிலையை அப் பாடல்கள் அடைந்திருக் கின்றன என்று கருதியிருப்பார். "வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடுகின்ற" கருணையுள்ளமும், 'ஆருயிர் கட்கெல்லாம் நான்அன்பு செயல்வேண்டும்' என்ற அவர்முறை யீடும் "எத்துணையும் பேதமுறாது, எவ்வுயிரும் தம்முயிர் போல், எண்ணியுள்ளே, ஒத்து, உரிமையுடையவராய், உவக்கின்றார் யாவர், அவருளந்தான், சுத்த, சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடமென நான் தேர்ந்தேன், அந்த வித்தகர் தம அடிக்கேவல் புரிந்திட என் சிந்தை மிக விழைந்ததாலோ" என்கிற அவர் வாக்குகளும், அவரைப் பரவசமடையச் செய்திருக்கும். வேதங்களில் வேரூன்றிய இந்திய சமயச் சிந்தனைகள் இராமலிங்கரில் பழுத்தன என்று அவர் கூறியிருப்பார்.

---

# சைவ சித்தாந்த மகா சமாஜக் கட்டிட டிரஸ்ட் கூட்ட நிகழ்ச்சிக் குறிப்பு

1966 ஆம் வருஷம் நவம்பர் மாதம் 20 ஆம் தேதி இராய புரம் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் இல்லத்தில் சைவ சித்தாந்த மகா சமாஜக் கட்டிட டிரஸ்ட் கூட்டம் நடைபெற்றது.

வந்திருந்தோர் : 1. திரு. அ. சோமசுந்தரஞ் செட்டி. யார், 2. திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, 3. திரு. ந. ரா. முருகவேள், 4. திரு. T. E. சிவநேசன் செட்டியார். சிறப்பு அழைப்பின்மேல் வந்திருந்தவர்கள் : 1. திரு. G. M. முத்துசாமிப் பிள்ளை, 2 திரு. C. N. சிங்காரவேல் முதலியார், 3. திரு. மு. நாராயணசாமி முதலியார், 4. திரு. நே. த. கிருஷ்ணசாமி முதலியார்.

கூட்டத்துக்குத் திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார்கள்.

நிறைவேறிய தீர்மானங்கள் :

1. திரு. நல். முருகேசமுதலியார் அவர்களுடைய ராஜி நாமா (விலகல்) கடிதம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.
2. திரு. நல். முருகேச முதலியார் அவர்களுக்குப் பதிலாகச் சமாஜச் செயற்குழு உறுப்பினர்களில் ஒருவராகிய திரு. N. T. கிருஷ்ணசாமி முதலியார் டிரஸ்ட் குழு அங்கத்தினராக நியமிக்கப் பெற்றார்.
3. சைவ சித்தாந்த மகா சமாஜக் கட்டிட டிரஸ்ட் நிதியைத் தியாகராயநகர் இந்தியன் பாங்க் கிளையில் டிரஸ்ட் பேரில் கணக்கு வைக்கத் தீர்மானிக்கப் பெற்றது.
4. திரு. N. T. கிருஷ்ணசாமி முதலியார் சமாஜக் கட்டிட வாடகை முதலியவற்றை வசூல் செய்து சில்லரைச் செலவுகளுக்காகப் பத்து ரூபாய் வைத்துக்கொண்டு, மீதியை அப்போதைக்கப்போது பாங்கில் செலுத்தித் தலைவரின் அனுமதியின்பேரில் செலவு செய்து, கணக்குகளை எழுதி மூன்று மாதங்களுக்கு ஒருமுறை டிரஸ்ட் கூட்டத்தைக் கூட்டி, அக்கூட்டத்தில் கணக்குகளை டிரஸ்டிகளின் அங்கீகாரத்துக்கு வைக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

5. தலைவர் விரும்பும்போது அவரிடம் கணக்குபளை அவரது பார்வைக்குச் சமர்ப்பிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.
6. பாங்கில் பணம் வாங்கவும், செலுத்தவும் திரு. N. T. கிருஷ்ணசாமி முதலியார் அவர்களுக்கு அதிகாரம் அளிக்கப் பெற்றது.
7. டிரஸ்டின் கடிதப் போக்குவரத்தையும், கடிதக்கோப்புகளையும் திரு. நே. த. கிருஷ்ணசாமி முதலியார் அவர்களை அவர்கள் பொறுப்பில் வைத்துக்ககாள்ளத் தீர்மானிக்கப்பட்டது.
8. இத்தீர்மானங்கள் இன்று முதலே அமுலுக்கு வர வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது.
9 இன்றுவரையிலுள்ள டிரஸ்ட் கணக்குகளைத் திரு. குமார் (Defence Dept) அவர்கள் தணிக்கை செய்ய வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது.

(ஒப்பம்) A. சோமசுந்தரம்,
தலைவர்.

## மதிப்புரை

"திருத்தணிகைப் பெருமான் குயிற்பத்து" என்னும் நூல் ஒன்று வரப்பெற்ருேம். இதன் ஆசிரியர் திரு. நா. ப. தணிகையரசு, இந்துமதபாடசாலை, வாலாஜாபாத், செங்கை மாவட்டம்.

இது பராபவ ஆண்டு கார்த்திகை 2ஆம் நாள் சஷ்டிப் பெருவிழாவில் வெளியிடப் பெற்றது. திருவாசகக் குயிற் பத்தை ஒட்டியே இக் குயிற்பத்தும் விளங்குகின்றது. இதிலிருந்து ஆசிரியரின் திருவாசக ஈடுபாடு, பக்திநெறியைப் பரப்ப அவர் கொள்ளும் ஆரா அவா, சமய உண்மைகள் பலவற்றைக் காணலாம். யாவரும் பெற்றுப் படித்துப் பயன் பெறுவார்களாக. விலை குறிக்கப்பெறவில்லை. தபால் செலவு அனுப்பின் அனுப்பி வைப்பார்கள். (அம்பை)

"திரு நாராயணதாச சுவாமிகள் வரலாறு" என்னும் நூல் ஒன்று வரப்பெற்றோம் இதனை எழுதியவர் தில்லிப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் க. ஆறுமுகம் எம். ஏ., எம்' லிட்., பி. எச். டி., ஆவர். வெளியிடுவோர் திரு நாராயணதாச சுவாமிகள் தேவஸ்தானம், வீரபாண்டி, தென்னாற்காடு மாவட்டம். 90 பக்கங்களும் அழகிய படங்கள் 5ம் கொண்டுள்ளது. விலை ரூ 1-50 ஆகும்.

நம் தமிழ்கத்தில் சமயப் பெரியார் பலர் தோன்றி இலை மறைகாய் போல் வாழ்ந்து மறைந்து விடுகின்றனர் அவர்கள் வாழ்க்கையில் ஆற்றிய அற்புதங்கள் பலவாயிருக்கலாம். அவற்றை யெல்லாம் அவ்வப் பகுதியில் வாழ்கின்ற மக்கள் நூல் வாயிலாய் எழுதி எல்லா மக்களுக்கும் தெரியப்படுத்துவது மிகவும் இன்றியமையாத கடமையாகும். "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்று கொண்டு தெய்வ நம்பிக்கை குறைந்து வருமிக்காலத்து இத்தகைய பெரியோர்களின் வரலாறு தான் முன்னைப் பெரியோர்களின் வரலாற்றினையும் நன்கு படித்து இன்புற்றுப் பக்திநிலைக்கு ஈர்த்துச் செல்ல வழி காட்டுவதாய் அமையும் என்பது உறுதி.

திருநாராயணதாசர் என்னும் பெரியார் அரிசன வகுப்பில் தோன்றிய திருவுடையோராய் தில்லைக் கோவிந்தராசப் பெருமாள் திருமுதுகுன்றம் வருத்தாம்பிகை ஆகிய தெய்வங்களின் அருள் வாய்க்கப் பெற்று பல அற்புதங்களைச் செய்து நம்மவர் கண்முன்னே வாழ்ந்தவர். இந்நூல் அவர் பெருமை கூறும் சிறந்த வரலாறு ஆகும். எத்தகைய உலோகாயதவாதியும் இது போன்ற நூலைப் படித்தால் மனம் நெகிழ்ந்து தெய்வ நம்பிக்கை கொள்வான் என்பது உறுதி. இத்தகைய நூல்கள் இக்காலத்து அதிகமாக வெளிவர வேண்டும். காலங்கருதி நன்முறையில் இவ்வரலாற்றினை எழுதியுதவிய ஆசிரியரையும் வெளியிட்ட தேவத்தானத்தாரையும் பாராட்டுகிறோம். யாவரும் வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்களாக.

(அம்பை)

“ சென்னிமலை முருகன் புலவராற்றுப் படை ” என்னும் நூல் ஒன்று வரப் பெற்றோம். இதன் ஆசிரியர் வித்து வான் வே ரா. தெய்வசிகாமணி. இது சென்னிமலைத்தல புராண வெளியீட்டுக் குழுவினரால் வெளியிடப் பெற் றது. விலை ரூ 0-75 ஆகும்.

இதன்கண் இவ்வாசிரியரால் எழுதப் பெற்ற நூலின் பொருட் சுருக்கமும் புலவராற்றுப் படை பற்றிய சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றும் நூலும் உள்ளன. 46 பக்கங்களில் 945 அடிகளுடன் நிலைமண்டில ஆசிரியப் பாவில் இந்நூல் சிறந்து மிளிர்கின்றது. பண்டையாசி ரியர் நெறியினின்றும் தவறாது தற்போதைய பெருமை களையும் கூறி இந்நூல் செல்லும் திறம் மெச்சத்தக்கது. தக்க குறிப்புரையையும் பல மேற்கோள்களுடன் இந் நூலாசிரியர் நன்முறையில் அடிக்குறிப்பாகச் சேர்த்திருப் பது மிகவும் வரவேற்கத்தக்கதாகும்.

கலைக்கடல் கடந்தும் கலிக்கடல் கடக்கும்
வகையறி யாது மயங்கினை அந்தோ!

எனப் பரிசு பெற்றபுலவன் பரிசு பெறும் புலவனைப் பற்றிக் கூறும் பகுதி சிந்திக்தின்புறற்குரியதாம். இதனைப் போன்று நயங்கள் அமைந்த பகுதிகள் இந்நூலில் செறிந்து காணப் பெறுகின்றன. சுருங்கக் கூறின் இந் நூலினைப் படிப்போர் முருகனருள் வேட்டு அவனடியவர் ஆவது திண்ணம். அத்தகைய நிலையில் பத்தி நெறியை வளர்க்கும் பான்மையில் இவ்வாசிரியர் தக்கதிருத்தொண் டினைச் செய்துள்ளார். திருமுருகாற்றுப்படையை யடி யொற்றியே அதன் சிறப்புகள் யாவையும் விளங்கக் காலத்துக்கு ஏற்ற நிலையில் எளிமை நடையுடன் இந் நூலியற்றிய ஆசிரியரை எவ்வளவு போற்றினும் தகும். அன்பர்கள் யாவரும் வாங்கிப் படித்து,

யமராசன் கைபுகுதார் போரூரன் கால்புகுவார் தாயுதரப்
பைபுகுதார் சேரார் பயம்'

என்னும் நன்னிலையை அடைவாராக. (அம்பை)

"ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜாவிதி" (தமிழ் மொழி பெயர்ப்பு) என்னும் நூல் ஒன்று வரப் பெற்றோம். இது அகோர சிவாச்சாரியார் அருளியது. தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தாரால் (இராம நாதபுரம் மாவட்டம்) வெளியிடப் பெற்றது. திரு. பொ. முத்தைய பிள்ளை, சிவ ஸ்ரீ தத்புருஷ தேசிகர் ஆகிய வர்கள் பரிசோதித்து இதனை நன்முறையில் வெளியிட உதவி புரிந்துள்ளார்கள். நல்ல அச்சு; இரண்டாம் பதிப்பாக வெளியிடப் பெறுகிறது; டிம்மியளவில் 143 பக்கங்கள் கொண்டது; நல்ல கட்டடத்தோடு கூடியது. இந்நூலில் ஆசாரியர் கடமைகள், அவர் ஆலய வழிபாடு செய்ய வேண்டிய முறைமை முதலிய பல செயல் முறை கள் விளக்கப்பட்டுள சைவர்கள் யாவரும் நம் சமயச் சடங்குகள் பற்றி ஆகமங்கள் என்ன கூறுகின்றன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாவா? அவ்வாறு தெரிந்து கொள்ள வாய்ப்பாக இந்நூல் விளங்குகின்றது. இச்சிவாகம சங்கத்தார் "முன் பல பெருமை வாய்ந்த நூல்களை வெளியிட்டனர். நல்ல சமய நூல் நிலையத்தைப் பெற்றுள்ளனர்" எனத் தக்கார் பலர் வாயிலாய்க் கேட்டின்புற்றோம். அதற்கு ஓர் எடுத்துக்காட்டு இந் நூல் வெளியீடு என்பதில் ஐயமில்லை. அன்பர்கள் வாங் கிச் சமயச் சடங்குகள் பற்றிய உண்மைகளைத் தெரிந்தின் புறுவார்களாக. (அம்பை)

"தடைகளும் விடைகளும்" என்னும் நூல் ஒன்று வரப் பெற்றோம். தடைகள் கேட்டோர் மறைமலையடிகள் மன்றத்தினர், புன்செய்ப்புளியம்பட்டி, கோவை மாவட் டம். விடைகள் எழுதியவர் புலவர்மாமணி சித்தாந்த வித்தகர் முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்கள், மலேயா. அம்மன்றத்தினரே இந்நூலை வெளியிட்டுள்ள

னர். மிகச் சிறந்த பதிப்பு. இந்நூலில் எழுபது தடை களும் அவற்றிற்குரிய விடைகளுமுள்ளன. 90க்கு மேற் பட்ட பக்கங்களையுடையது. விலை ரூ 1-50.

தாகம் எழுவது மனித இயற்கை. அதைத் தீர்த்து உயிரை ஓம்புவது ஒவ்வொருவருடைய கடமையாகும். அதைப்போன்றே சமய உலகில் மக்களுக்கு ஐயங்கள் எழு வது இயற்கை அவற்றைத் தீர்ப்பது அறிஞர் கடமை யாகும். ஐயங்களைக் கேட்காத குற்றம் இளைஞர்களையும் போக்காத குற்றம் அறிஞர்களையும் சாரும். இவ்விரு குற்றம் இவ்விருசாராருக்கும் ஏற்படாவண்ணம் அக் குற்றங்களைப் போக்க எழுந்ததே இந்நூல். சமய சம் பந்தமாய பல அருமையான சிக்கலான வினாக்கள் இதில் எழுப்பப்பட்டுள்ளன. அவற்றிற்கு அறிவுக்கும் விஞ்ஞா னத்திற்கும் பொருத்தமான சிறந்த பதில்களும் இந்நூலி லுள. யாவரும் வாங்கிப் படித்து தாங்களும் இன்புறுவ தோடு இளைஞருலகத்துக்கும் பயன்படச் செய்ய வேண்டு கிறோம். திருச்சி மாநாட்டில் இப்புத்தகம் விலைக்குக் கிடைக்கும். வேண்டுவோர் வாங்கிப் பயன் பெறுவார் களாக. (அம்பை)

## மார்கழி மாத விசேட தினங்கள்

| | | |
|---|---|---|
| 6 | (21-12-66) | வாயிலார் நாயனார் விழா |
| 12 | (27-12-66) | சடைய நாயனார் விழா |
| ,, | ,, | திருவாதிரை விழா |
| 18 | ( 2-1-67 ) | இயற்பகை நாயனார் விழா |
| 21 | ( 5-1-67 ) | மானக்கஞ்சாற நாயனார் விழா |
| 26 | ( 10-1-67 ) | சாக்கிய நாயனார் விழா |

உ

# சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம்

# சைவத் தேர்வு வினாக்கள் - 1966

—: ★ :—

## சைவப் புலவர் தேர்வு

### இலக்கணம்

நேரம் : 3 மணி] [மதிப்பெண் : 100

குறிப்பு :—1. ஒவ்வொரு வினாவிலும் ஒவ்வோர் உட்பிரிவை விடுக.

2. எல்லா வினாக்களுக்கும் மதிப்பெண் சமம்.

3. விடைகள் சுருக்கமாகவும், தெளிவாகவும் இருக்கவேண்டும்.

*1.* அ. மொழிமரபில் கூறப்படும் எழுத்திலக்கணங்கள் யாவை? அவற்றை அங்குக் கூறக் காரணமென்ன?

ஆ. "மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்"
"ஈரியல் மருங்கினும் இசைமை தோன்றும்"
—இவற்றின் பொருளைத் தெளிவு படுத்துக.

இ. எழுத்துகளின் பொதுப் பிறப்பு யாது?

ஈ. பின்வரும் தொடர்களுக்குப் புணர்ச்சி விதி கூறுக :

1. மணிக்கு. 2. தமது.
3. ஆன்கோடு. 4. ஆடிக்கு.
5. அவற்றுக்கோடு.

உ. மூன்றும் வேற்றுமைத் திரிபுகள் யாவை?

ஊ. சுட்டுப் பெயர்களுக்கு எத்துணை இடத்து விதிகள் கூறப்படுகின்றன? காரணமென்னை?

எ. திங்கட் பெயரும், நாட்பெயரும் எவ்வீறுகளில் வைத்தோதப் படுகின்றன? ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு சான்று தருக.

2. அ. "செப்பும் வினவும் வழாஅல் ஓம்பல்"—இவ்வொரு தொடரைக் கொண்டு சேனவரையர் அமைக்கும் வழுவமைதிகள் யாவை?

ஆ. இயற்கைப் பொருள், செயற்கைப் பொருள்—இவை மொழிகளில் பயிலுந் திறத்தைச் சான்று கொண்டு விளக்குக.

இ. "எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே" —இதன் பொருளைத் தடைவிடைகளான் விளக்குக.

ஈ. கிளவியாக்கத்தை யடுத்து வேற்றுமை யியலை வைத்தமைக்குச் சேனவரையர்கூறும் விளக்கம் யாது?

உ. முதற்பெயர், சினைப்பெயர்—இவை ஒரு தொடர்க்கண்ணே வருங்காலத்து எவ்வாறு உருபேற்கும்?

ஊ. பன்மைக்கே யன்றி ஒருமைக்கும் உரியவாய் வருவனவற்றைப் பன்மைப்பெயரென்று தொல்காப்பியர் கூறுவது பொருந்துமாற்றை ஆராய்க.

எ. இடையியல் முதற் சூத்திரத்திற்குச் சேனவரையர் கூறும் இரு உரைகளையும் எடுத்துக் காட்டி விளக்குக.

3. அ. அறுவகைப் பெயரும் அறுவகைப் பொழுதும் ஐந்திணைக்கும் உரியவாதல் யாங்ஙனம்?

ஆ. பண்டைத் தமிழர் ஒழுகலாறுகக் கரந்தைத் திணையில் கூறப்படுவன யாவை?

இ. "சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப
இழிந்துழி இழிவே சுட்ட லான"
—இச்சூத்திரத்துக்கு இளம்பூரணர் கூறும் உரை யாது?

ஈ. கற்புக் காலத்துத் தலைவிக்குரிய கூற்று நிகழும் இடங்களுள் ஆறனைக் குறிப்பிட்டு விளக்குக.

உ. பெண்டிர்க்கே உரிய இயல்புகள் யாவை?

ஊ. இறைச்சிப் பொருளுக்கும் உள்ளுறை உவமத்துக்கும் ஒவ்வோர் எடுத்துக்காட்டு தந்து விளக்குக.

எ. இளிவரல், மருட்கை, வெகுளி—இவை மூன்றும் எவை பற்றித் தோன்றும்?

4. அ. உருவம் எதனுல் உணரப்படும்? அதன் வகைகளைக் கூறி விளக்குக.

ஆ. அநுமானம் எத்துணை வகைப்படும்? அவற்றுள் ஒன்றனை விளக்குக.

இ. செயற்கை எத்தனை வகைப்படும்? அவற்றை விளக்குக.

---

## இலக்கியம்

நேரம் : 3 மணி] [மதிப்பெண் : 100

குறிப்பு :—1. ஒவ்வொரு வினாவிலும் ஒவ்வோர் உட்பிரிவை விட்டு விடுக.

2. எல்லா உட்பிரிவுகளுக்கும் மதிப்பெண் சமம்.

I 1. திருநாவுக்கரசர் "பொன்னார்ந்த திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" என்று கூறிய செய்தி யாது? எங்குக் கூறினார்?

2. "கால நிலைமையாலுங்கள் கருத்தில் வாட்ட முறீர்" இடஞ்சுட்டி விளக்குக.

3. நாவுக்கரசர் புராணத்தில் குறிப்பிடும் சமணர்கள் வழக்கங்கள் நான்கினைக் கூறுக.

4. சேக்கிழார் திருநாவுக்கரசரைப் புகழுமிடங்கள் இரண்டு கூறி விளக்குக.

II 1. சம்பந்தர் தேவாரத்திலிருந்து பதிபசுபாச உண்மையை நிறுவவல்ல தேவாரங்கள் வகைக் கொன்று சான்று தருக.

2. "திருஞானசம்பந்தரும் சமூகத் தொண்டும்" என்பது பற்றி ஒரு கட்டுரை வரைக.

3. சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே.

—இச்செய்யுளில் காணும் நயங்களை விளக்குக.

4. சம்பந்தரின் முற்காலத்து வாழ்ந்த அடியார்களையும் சம காலத்து வாழ்ந்த அடியார்களையும் குறிப்பிடுக.

III 1. "பணியுமாம் என்றும் பெருமை" எனும் பண்பு திருவாசகத்தில் எவ்வாறு காணப்பெறுகிறது? விளக்குக.

2. திருவாசகத்தின் இறுதிப் பதிகம் யாது? அதில் ஏதாவது ஒரு செய்யுளை எழுதி அதன் கருத்தினையும் வரைக.

3. எங்கள் பிராட்டியும் எங்கோனும்போன்றிசைந்தவை யாவை? எப்படி என விளக்குக.

4. "தந்த துன்றன்னை" என்ற திருவாசகச் செய்யுளை எழுதி அதன் நயங்களை விளக்கி வரைக .

IV 1. திருவிசைப்பா ஆசிரியர்கள் யாவர்? அவர்களுள் ஒருவரைப் பற்றிச் சிறு குறிப்புத் தருக.

2. திருவிசைப்பாவில் பிற திருமுறைகளுள் இல்லாச் சிறப்பியல்புகளாகக் காணப்பெறுவன மூன்றினை வரைக.

3. இறைவனின் திருவுருவச் சிறப்பினைத் திருவிசைப்பா எவ்வாறு போற்றிப் புகழ்கிறது?

---

## சாத்திரம்

நேரம் : 3 மணி] [மதிப்பெண் : 100

குறிப்பு:—எல்லா வினக்களுக்கும் மதிப்பெண் சமம்.

1. சிவஞான போத முதற் சூத்திரத்தினை எழுதி அதற்குப் பதவுரையும், இலக்கணக் குறிப்புக்களும் தந்து, அதிகரணப் பாகுபாடும் குறிக்க.

2. சிவஞான போதத்தில் வரும் உவமைகள் ஏதேனும் இரண்டினைச் சுட்டி, அவற்றை விவரிக்க.

3. சிவஞான போத வெண்பாக்கள் இரண்டினை எழுதி, அவற்றிற்குப் பொழிப்புரையும், இலக்கணக் குறிப்புக்களும் வரைக.

4, சிவஞான சித்தியாரின் கவிதைச் சுவையினை வலியுறுத்த இரண்டு செய்யுட்களை எடுத்துக் காட்டுக.

5. அருள்நந்தி சிவாசாரியார் உவமைகள் கூறுவதில் வல்லவர் என்பதற்கு ஏதேனும் ஓர் உதாரணம் தருக.

6. அருள்நந்தி சிவாசாரியார் தேவாரத் திருமுறைகளில் மிக்க ஈடுபாடு வாய்ந்தவர் என்பதனை நிறுவுக.

7. உமாபதி சிவம் சைவ சித்தாந்தத்தின் சிறப்பினை எங்ஙனம் விளக்குகின்ருர் ?

8. சிவப்பிரகாசத்தில் வரும் "மாயை மாமாயை" எனவரும் செய்யுளின் பொருளைத் தெளிவுறுத்துக.

9. 'நிமித்த காரண பரிணும வாதம்' என்னும் கொள்கையினைச் சுருக்கி வரைக.

10. சிவஞான சுவாமிகளின் அரும்பெரும் உரைத் திறனை யுணர்த்தச் சில குறிப்புக்கள் எழுதுக.

---

## உரைநடை

நேரம் : 3 மணி] [மதிப்பெண் : 100

குறிப்பு :—எல்லா வினுக்களுக்கும் மதிப்பெண் சமம்.

1. சைவ சித்தாந்தத்தின் உயர்ந்த கொள்கைகளை ஆசிரியர் மறைமலையடிகள் எவ்வாறு விளக்குகிருர்?

2. சிவஞான சித்தியார் பற்றித் திரு.ந.சிவகுருநாத பிள்ளையவர்கள் கூறும் முடிந்த ஆய்வு யாது? விளக்குக.

3. ஏதாவது ஒரு குறள் எழுதி அது சைவ சித்தாந்தத்தை எவ்வாறு விளக்கிச் செல்கிறது என்பதை விரிவாக ஆய்ந்து எழுதுக.

4. சிவஞான முனிவர் உரைநடை நூல்களிலிருந்து அவர் பல்கலைப் புலமை தெற்றெனப் புலப்படுமாற்றினை விளக்குக.

5. இயற்பகை நாயனுர் அல்லது குங்கிலியக் கலைய நாயனுர் பற்றி நாவலர் பெருமான் குறிப்பிடும் சிறப்புக்களை எழுதுக.

---

# இளஞ் சைவப் புலவர் தேர்வு

## இலக்கணம்

நேரம் : 3 மணி] [மதிப்பெண் : 100

குறிப்பு :—எல்லா வினாக்களுக்கும் மதிப்பெண் சமம்.

1. சிறப்புப் பாயிரமாவது யாது? அதன் இலக்கணத்தைத் தெளிவாக விளக்குக.

2. குற்றியலிகரம் என்பது என்ன? அது எதனால் முப்பத்தேழாயின.

3. செய்யுள் விகாரங்கள் எவை? உதாரணத்தோடு விளக்குக.

4. தெரிநிலை வினைமுற்று விகுதிகள் எவை? விளக்குக.

5. உயிர் முன் உயிர் புணர்ந்து வரும் சூத்திரத்தினை விளக்குக.

6. திசைச் சொல்லாவன யாவை? விளக்குக.

7. ஆவிரம் வேர், செம்பொனன்று, மகத்துக்கை—இவற்றுள் இரண்டினுக்குப் புணர்ச்சி விதி கூறுக.

8. தொகாநிலைத் தொடர் மொழிகள் என்பவை எவை? அவற்றின் வகையினை விளக்குக.

9. பொருள்கோள் எத்தனை வகைப்படும்? அவற்றுள் ஒன்றினுக்கு உதாரணந் தருக.

10. பெருங்காப்பிய இலக்கணங்கள் யாவை ?

11. வைதருப்ப நெறிக்குரிய இயல்புகளை விளக்குக.

12. தீவகவணி அல்லது வேற்றுப்பொருள் வைப்பணியின் உட்பிரிவுகளைக் குறிப்பிட்டு அவற்றுள் ஒன்றினுக்கு உதாரணங் காட்டுக.

13. விபாவனை அணி, அதிசயவணி, நுட்பவணி, சுவையணி—இவற்றுள் இரண்டினை விளக்குக.

14. ஐவகைச் சீர்வகைகளை விளக்குக.

15. சிந்தடி, நெடிலடி — இவைபற்றிக் குறிப்பு எழுதுக.

16. செந்தொடை, கூழை, மேற்கதுவாய் என்றால் என்ன ? இவற்றுள் ஒன்றினுக்கு உதாரணந் தருக.

17. நேரிசைச் சிந்தியல் வெண்பா, ஆசிரியத்துறை, கலி விருத்தம்—இவற்றுள் இரண்டினுக்கு இலக்கணந் தருக.

18. " ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை "

இஃது எப்பாவில் எவ்வினத்தைச் சார்ந்ததாகும் ? காரணம் காட்டுக.

19. மருட்பாவைப் பற்றி நீவிர் அறிந்த இலக்கணங்களைத் தொகுத்தெழுதுக.

20. ஒப்பு, ஆனந்தம் என்றால் என்ன ? அவற்றுள் ஒன்றினை உதாரணத்தோடு விளக்குக.

---

## இலக்கியம்

நேரம் : 3 மணி] [மதிப்பெண் : 100

I கீழ்வருவனவற்றுள் நான்கு வினாக்களுக்கு விடை எழுதுக :—

1. திருமுருகாற்றுப்படையில் குறவர் முருகப்பெருமானை வழிபடும் முறை எங்ஙனம் விளக்கப்பட்டுள்ளது?

2. திருக்குறளில் துறவு என்ற அதிகாரத்தில் கூறப்பட்ட கருத்துக்களைத் தொகுத்து வரைக.

3. வாழ்க்கைத் துணைக்கு இருக்கவேண்டிய சிறப்பியல்புகளைச் சுருக்கி வரைக.

4. சுந்தரர் தேவாரத்திலிருந்து நகைச் சுவைக்கு மூன்று சான்றுகள் தந்து விளக்குக.

5. கந்தர் கலிவெண்பாவில் காணக்கிடக்கும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை எடுத்துக் காட்டுக.

6. கந்தரனுபூதியில் அருணகிரியார் தமது நெஞ்சிற்கும் உலக மக்களுக்கும் கூறியுள்ள அறவுரைகள் யாவை?

7. சுந்தரர் தேவாரத்தின் துணைகொண்டு சிவபெருமானின் பண்புகளைப் புலப்படுத்துக.

II கீழ்வருவனவற்றுள் மூன்று வினாக்களுக்கு விடை தருக.

1. திருமுருகாற்றுப்படையில் வந்துள்ள பழமுதிர் சோலையின் இயற்கை வளத்தினை விளக்கி வரைக.

2. ஒப்புரவு அறிதல் என்ற அதிகாரம் அமைத்த வள்ளுவர் ஈகை என்று மற்றொரு அதிகாரம் பகுத்துக் கூறக் காரணம் யாது? இந்த இரண்டு அதிகாரங்களில் காணப்பெறும் ஒப்புமைகளைக் குறிப்பிடுக.

3. சுந்தரர் வரலாற்றினை அறிதற்கு அவரது தேவாரம் அகச்சான்றாக அமைந்துள்ள முறையினை விளக்குக.

4. சுந்தரருடைய புலமை நலத்தினை ஆராய்க.

5. கந்தர் கலிவெண்பாவில் கூறப்படும் முருகப் பெருமானின் திருவிளையாடல்களைப் புலப்படுத்துக.

6. "கந்தரனுபூதி" திருமூலரின் திருமந்திரத்தோடு ஒப்பிட்டுக் காணும் தகுதி பெற்றுள்ளது என்பர். (திரு. வ. சு. செ.) இக்கூற்றிற்குச் சான்றுகள் தந்து விளக்குக அல்லது கந்தரனுபூதியில் காணக்கிடக்கும் பக்திச் சுவையினைப் புலப்படுத்துக.

III கீழ்க்காணும் திருக்குறட்பாக்களில் யாதானும் ஒன்றிற்குப் பரிமேலழகர் கூறியுள்ள விளக்கவுரை யினைக் குறிப்பிடுக.

1. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும்
ஏமப் புணையைச் சுடும்.

2. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

IV கீழ்க்காணும் உவமைகளுள் எவையேனும் மூன்று எவைகளை விளக்க வந்தன? உவமப் பொருத்தத் தினையும் ஆராய்க.

1. வளியிடைத் தீ எழுதல்.
2. பலவு மெழுந்து சுடர் பாலித்தல்.
4. கன்று முட்டி யுண்ணச் சுரந்த காலி.
5. வேட்டுவன் புள்சிமிழ்த்தல்.
6. சமன் செய்து சீர்தூக்கும் கோல்.

V கீழ்க்காணும் பகுதிகளுள் மூன்றிற்கு இடம் சுட்டிப் பொருள் நயங்களையும் புலப்படுத்துக.

1. மங்கை சிலம்பின் மணியொன் பதிற்ளுென்றும்
   துங்கமடவார் துயர்தீர்ந்து.
2. நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்
   நின்னடி யுள்ளி வந்தனன்.
3. பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்
   நாமேல் நடவீர் நடவீர் இனியே.
4. இருந்து நீர் தமிழோடிசை கேட்கும்
   இச்சையாற் காசு நித்தல் நல்கினீர்.
5. மூவராயும் இருவராயும் முதல்வன் அவனேயாம்.

——

## சாத்திரம்

நேரம்: 3 மணி] [மதிப்பெண்: 100

குறிப்பு:—எல்லா வினுக்களுக்கும் மதிப்பெண் சமம்.

1. திருவுந்தியாரைப் பின்பற்றியே திருக்களிற்றுப் படியார் இயற்றப்பெற்றது என்பதற்குத் தக்க சான்று ஏதேனும் ஒன்று தந்து விளக்குக.

2. திருக்களிற்றுப்படியார் ஆசிரியர் திருவாசகத் தில் மிக்க ஈடுபாடு உடையவர் என்பதனை நிறுவுக.

3. வித்தினைத் தேடி முளையைக் கைவிடுதல், கூட் டில் வாள் சாத்தி நிற்றல் என்னும் தொடர்களின் பொருளைத் தெளிவுறுத்துக.

4. திருக்களிற்றுப்படியாரில் தாபதர்களின் இயல்பு எங்ஙனம் விளக்கப்பெற்றுள்ளது அல்லது சிவன்பால் மன்னுயிர்கள் ஆவதற்கும் அழிவதற்கும் கூறப்பெற்ற உவமை யாது?

5. வித்தியா தத்துவங்கள் என்பன யாவை? அவற்றின் செயல்களை விவரிக்க அல்லது குரு லிங்க சங்கம வழிபாடு பற்றி மனவாசகங் கடந்தார் கூறுவன யாவை?

6. சிவஞான சுவாமிகள் எடுத்தாண்டுள்ள திரு வருட் பயன் செய்யுட்கள் இரண்டினைக் குறிப்பிடுக.

7. குருவின் இன்றியமையாமையினைத் திருவருட் பயன் எங்ஙனம் வற்புறுத்துகின்றது?

8. 'அணைந்தோர் தன்மை' பற்றி உமாபதிசிவம் கூறும் கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.

9. வினு வெண்பாவில் வரும் வினுக்களுள் ஏதேனும் இரண்டினைக் குறிப்பிட்டு, அவற்றிற்கு விடை தருக.

10. கொடிக்கவியில் நீர் சுவைத்த ஏதேனும் ஒரு செய்யுளை எழுதிப் பொருள் விளக்குக.

---

## உரைநடை

நேரம்: 3 மணி] [மதிப்பெண்: 100

குறிப்பு:—எல்லா வினுக்களுக்கும் மதிப்பெண் சமம்.

1. சைவம் எத்தன்மையது? அது எவ்வாறு சமரசத்தைத் தழுவியுள்ளது என்பதை மூன்று சான்றுகள் தந்து நிறுவுக.

2. வாகீசர் உண்மை மெய்யுணர் ஞானி என்னும் கருத்தை அகச்சான்றுகள் மூன்று காட்டி வலியுறுத்தி விளக்குக.

3. பட்டினத்தார் தாயுமானவர் பாடல்களின் ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கி வரைக.

4. ஏனுதிநாத நாயனர் வரலாற்றினையாவது கடல் சுவற வேல் விட்ட படலத்தினையாவது விளக்கி வரைக.

---




## சமாஜ வெளியீடுகள்

| | ரூ. | பைசா |
|---|---|---|
| சைவ சமயச் சொற்பொழிவுகள் | 2 | [illegible]0 |
| ஞானியாரடிகள் நினைவுமலர் | 1 | 00 |
| முருகன் முந்நூல் | 0 | 40 |
| அறுபத்து மூவர் | 0 | 06 |
| வைர விழா மலர் | 2 | 00 |
| அறப்பயிற்சிமாலை | 0 | 50 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | 0 | 06 |
| சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே மொழிபெயர்ப்பல்ல—120 காரணங்கள் | 0 | 50 |
| சிவஞான சித்தியார் - சிவாக்கிரக யோகிகள் உரையுடன் | 0 | 50 |
| சிவலிங்க வழிபாடு | 0 | 50 |
| பிரதோஷ வழிபாடு | 0 | 20 |
| திருமயிலையும் பூம்பாவையும் | 0 | 50 |
| முருக வழிபாடு அல்லது முருக தத்துவ அருள் விரத வழிபாடு | 0 | 75 |
| சிவஞான போதம்-எளிய உரையுடன் (சிறியது) | 0 | 12 |
| திருவெம்பாவை-உரையுடன் (சிறியது) | 0 | 06 |
| நான் நம்புவன சில | 0 | 10 |
| விநாயகர் வழிபாடு | 0 | 20 |
| கூட்டு வழிபாட்டுப் பாமாலை | 0 | 20 |
| திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி பொன் விழா வெளியீடு | 1 | 25 |
| கந்தரனுபூதி—யந்திர உரையுடன் | 1 | 25 |
| சிவஞானபோதம்—தெளிவுரையுடன் | 0 | 50 |

### பாம்பன் - ஸ்ரீமத் : குமரகுருதாச சுவாமிகள் நூல்கள்

| | ரூ. | பைசா |
|---|---|---|
| சிறுநூற்றிரட்டு | 1 | 25 |
| சிவஞான தீபம் | 0 | 50 |
| சைவ சமய சரபம் | 2 | 50 |
| நாலாயிரப் பிரபந்த விசாரம் | 1 | 00 |
| சேந்தன் செந்தமிழ் | 1 | 50 |
| செவியறிவுறூஉ | 0 | 20 |

ரூ.பைசா

பாம்பன் - ஸ்ரீமத் : குமரகுருதாச சுவாமிகள் சரித்திரம் 1 50

தபால்—ரயில் செலவு தனி.



---

முருகன் அச்சகம், சென்னை - 14

செங்குந்தமித்திரன் அச்சக மேலாளர் திரு. வீ. சம்பந்தன் அவர்கள் இளவல் திரு. வீ. குஞ்சு பி.எ. அவர்களுக்கும் சுந்தரப்பெருமாள்கோயில் திரு. T. சம்பூரய்யா அவர்கள் திருமகளார் செல்வி பானுமதி அவர்களுக்கும் 1-12-66 அன்று திருவேரகத்தில் திருமணம் சிறப்புடன் நிகழ்ந்தது. புதுமணத்தம்பதிகள் எல்லா நலன்களும் பெற்று நீடிய நல்வாழ்வு வாழ ஏரகத்துறை எம்மான் அருள்புரிய அவன் திருவடியிணைகளையே வாழ்த்தி வணங்குகின்றோம்.

## பிற செய்திகள்

கிழக்குத் தாம்பரம் ஸ்ரீ கற்பக விநாயகர் பக்தஜன சபையின் ஆதரவில் வித்துவான் M. S. துரைசாமி பிள்ளையவர்கள் 28-10-66ல் "வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலம்" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

சென்னை, இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜனசபை, திருப்போரூர் கந்தசாமி திருக்கோயில் முதலிய பலவிடங்களில் 13-11-66 முதல் 20-11-66 முடிய கந்தர் சஷ்டி விழா மிக சிறப்புற நிகழ்ந்தது. முருகன் பெருமை பற்றியும், கந்த புராணம் பற்றியும் விரிவுரைகள் சிறப்புற நிகழ்ந்தன.

புரசைத் திருநெறிக்கழக 69ஆம் திங்கள் வழிபாடு 20-11-66 மாலை திருமயிலை விருபாட்சீஸ்வரர் திருக்கோயிலில் சிறப்புற நிகழ்ந்தது.

காஞ்சி குமரகோட்டத்தில் 19-11-66 அன்று கந்த புராணச் சொற்பொழிவு நிறைவு விழா நிகழ்ந்தது. பலர் கலந்து சொற்பொழிவாளர் வித்வான் ஜயசெந்தில்நாத முதலியாரைப் பாராட்டினர்.

திரிசிரபுரச் சைவசித்தாந்த சபைச் சார்பில், கரூர் வித்துவான் திரு. ச. நடேசனார் அவர்களால் நிகழ்த்தப் பெற்றுவரும் கந்தபுராண விரிவுரைத்தொடரில் 'பார்வதி தேவியார்' திருமண விரிவுரை 20-11-66ல் சபைக் கட்டிடத்தில் திருச்சி வக்கீல் திரு. S. சிவப்ரகாசம் அவர்கள் தலைமையில் நிகழ்த்தப் பெற்று விரிவுரையாளருக்கு அன்பளிப்பும் வழங்கப்பட்டது. சபைச் செயலாளர் திரு. சிவப்ரகாசம் நன்றி கூறினார்.

## மதிப்புரை

அகில இந்திய நாட்டு மருத்துவ மன்றத்தின் பதினோராவது மாநாட்டு நினைவு மலரும் அம்மாநாட்டின் நிகழ்ச்சிக் குறிப்பு நூலும் வரப் பெற்றோம். இம்மாநாடு சென்னை அரசாங்கத்தின் ஆதரவில் ஜூன் மாதம் சென்னையில் கூடிற்று. மாநாட்டுக் குழுத்தலைவரும், சென்னை அரசாங்கத் துணைச் செயலாளருமான திரு K. சிதம்பரம் அவர்களின் பெருமுயற்சி காரணமாக இம் மாநாடு சென்னையில் சிறப்பாக நடைபெற்றது. இம்மாநாட்டில் சித்த வைத்தியம் முக்கிய இடம்பெற்றது குறிப்பிடத்தக்கது. "சித்தவைத்தியத்திற்கும் சைவசித்தாந்த சாத்திரத்திற்கும் மிக்க தொடர்புண்டு, இது சம்பந்தமான ஆராய்ச்சி நல்ல பயன் தரும்" என்பது, திரு K. சிதம்பரம் அவர்களின் உறுதியான கருத்து. சித்தர் சித்தாந்த சம்பந்தமுடையோர் என்பது பெயரிலிருந்தே புலப்படும். ஆகவே அவர்கள் நூல் நம் சமய சம்பந்தமுடையது என்பது கூறாமலே அமையும். திருமூலர் போன்ற பல நாயன்மார்களைச் சைவ சித்தாந்திகள் சித்தர் வரிசையிலும் எண்ணுவதுண்டு. இந்நினைவு மலரில் திருக்குறளின் 'மருந்து' என்னும் அதிகாரத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு இடம் பெற்றுள்ளது பாராட்டற்குரியது.

கொ நீ. சி.

## வருந்துகிறோம்

நமது சமாஜ உறுப்பினரும் புரசைத் திருநெறிக் கழகத்தின் செயலாளருமாகிய திரு. செ. சுந்தரனார் அவர்களின் அருமைத் தந்தையார் திரு. கி. செங்கல்வராய முதலியார் அவர்கள் 14-11-66ல் இறையடி எய்தினார்கள். 29-11-66 அன்று இறுதிச் சடங்கு நிகழ்ந்தது. சைதை தேவாரம் நடராஜனார் அவர்கள் திருமுறையரங்கும் நிகழ்ந்தது. நம்மை விட்டுப் பிரிந்த அப்பெரியாரின் ஆன்மா எல்லாம் வல்ல இறைவன் திருவடி நீழலில் இன்புற்றிருக்க அவனருளை வாழ்த்தி வணங்குகின்றோம்.

---

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1. by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.